பரமபதி துணை.

# இலக்கணச்சுருக்கம்.

நல்லூர்

ஆறுமுகநாவலர்

செய்தது.

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பவ௵ கார்த்திகைமீ.

# சூசிபத்திரம்.

## எழுத்ததிகாரம்.

உ

பரமபதி துணை.

# இலக்கணச்சுருக்கம்.

முதலாவது

## எழுத்ததிகாரம்.

### எழுத்தியல்.

இலக்கணநூலாவது உயர்ந்தோர் வழக்கத்தையும் செய்யுள் வழக்கத்தையும் அறிந்து விதிப்படி எழுதுதற்கும் பேசுதற்குங் கருவியாகிய நூலாம்.

உ. அந்நூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், தொடர்மொழியதிகாரம் என மூன்றதிகாரங்களாக வகுக்கப்படும்.

எழுத்துக்களின் பெயர்.

ங. எழுத்தாவது சொல்லுக்கு முதற்காரணமாகிய ஒலியாம்.

ச. அவ்வெழுத்து உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து, ஆய்தவெழுத்து என நான்கு வகைப்படும்.

ரு. உயிரெழுத்துக்கள் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்னும் பன்னிரண்டெழுத்துக்களுமாம். இவை ஆவி எனவும் பெயர் பெறும்.

சு. உயிரெழுத்துக்கள் குற்றெழுத்து, நெட்டெழுத்து என இரண்டு வகைப்படும்.

எ. குற்றெழுத்துக்கள் அ, இ, உ, எ, ஒ, என்னும் ஐந்துமாம். இவை குறில் எனவும் பெயர் பெறும்.

அ. நெட்டெழுத்துக்கள் ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழுமாம். இவை நெடில் எனவும் பெயர் பெறும்.

கூ. மெய்யெழுத்துக்கள் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்னும் பதினெட்டெழுத்துக்களுமாம். இவை உடல், உடம்பு, உறுப்பு, ஒற்று, புள்ளி எனவும் பெயர் பெறும்.

க0. மெய்யெழுத்துக்கள் வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என மூன்று வகைப்படும்.

௧௧. வல்லெழுத்துக்கள் க், ச், ட், த், ப், ற் என்னும் ஆறுமாம். இவை வல்லினம், வன்கணம், வலி எனவும் பெயர் பெறும்.

௧௨. மெல்லெழுத்துக்கள் ங், ஞ், ண், ந், ம், ன் என்னும் ஆறுமாம். இவை மெல்லினம், மென்கணம், மெலி எனவும் பெயர் பெறும்.

௧௩. இடையெழுத்துக்கள் ய், ர், ல், வ், ழ், ள் என்னும் ஆறுமாம். இவை இடையினம், இடைக்கணம், இடை எனவும் பெயர் பெறும்.

௧௪. அ, இ, உ என்னும் மூன்றும் மொழிக்கு முதலிலே சுட்டுப்பொருளில் வரும்போது சுட்டெழுத்துக்களாம்.

உ-ம். அவன், இவன், உவன். எ-ம்.
அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன். எ-ம். வரும்.

௧௫. எகரம் மொழிக்கு முதலிலும், ஆகாரமும் ஓகாரமும் மொழிக்குக் கடையிலும், ஏகாரம் மொழிக்கு முதலிலும் கடையிலும், வினாப்பொருளில் வரும்போது வினாவெழுத்துக்களாம்.

உ-ம். எவன், எக்கொற்றன். எ-ம்.
கொற்றனா, கொற்றனோ. எ-ம்.
ஏவன், கொற்றனே. எ-ம். வரும்.

யா என்னும் உயிர்மெய்யும் மொழிக்கு முதலி

லே வினாப்பொருளில் வரும்போது வினாவெழுத்தாம்.

உ-ம். யாவன், யாங்ஙனம் என வரும்.

௧௬. அகரத்துக்கு ஆகாரமும், இகரத்துக்கு ஈகாரமும், உகரத்துக்கு ஊகாரமும், எகரத்துக்கு ஏகாரமும், ஐகாரத்துக்கு இகரமும், ஒகரத்துக்கு ஓகாரமும், ஔகாரத்துக்கு உகரமும், ககரத்துக்கு ஙகரமும், சகரத்துக்கு ஞகரமும், டகரத்துக்கு ணகரமும், தகரத்துக்கு நகரமும், பகரத்துக்கு மகரமும், றகரத்துக்கு னகரமும் இனவெழுத்துக்களாம். இடையெழுத்தாறும் ஓரினமாகும்; அவை இவ்விரண்டோரினமாகாவாம்.

௧௭. உயிர்மெய்யெழுத்துக்களாவன பன்னிரண்டுயிரும் பதினெட்டுமெய்மேலும் தனித்தனி ஏறி வருதலாலாகிய இருநூற்றுப்பதினாறுமாம்.

அவை க, கா, கி, கீ முதலியவைகளாம்.

உயிர்மெய்க்குற்றெழுத்துத் தொண்ணூறு; உயிர்மெய்நெட்டெழுத்து நூற்றிருபத்தாறு: ஆக உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு.

உயிர்மெய்வல்லெழுத்து எழுபத்திரண்டு; உயிர்மெய் மெல்லெழுத்து எழுபத்திரண்டு; உயிர்மெய்யிடையெழுத்து எழுபத்திரண்டு: ஆக உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு.

கஅ. ஆய்தவெழுத்தாவது குற்றெழுத்துக்கும் உயிர்மெய்வல்லெழுத்துக்கும் நடுவே மூன்று புள்ளிவடிவையுடையதாய் வரும் ஓரெழுத்தாம்.

உ-ம். எஃகு, கஃசு, அஃது, பஃறி என வரும்.

கக. மேற்சொல்லப்பட்ட உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டும், உயிர்மெய் இருநூற்றுப்பதினாறும், ஆய்தம் ஒன்றும் ஆகிய இருநூற்று நாற்பத்தேழெழுத்துக்களும் தமிழ் நெடுங்கணக்கில் வழங்கிவருதல் கண்டுகொள்க.

---

## எழுத்துக்களின் மாத்திரை.

உ0. குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று; நெட்டெழுத்துக்கு மாத்திரை இரண்டு.

மெய்யெழுத்துக்கும் ஆய்தவெழுத்துக்கும் தனித்தனி மாத்திரை அரை.

உயிர்மெய்க்குற்றெழுத்துக்கு ஏறிய உயிரினளவாகிய மாத்திரை ஒன்று; உயிர்மெய்நெட்டெழுத்துக்கு ஏறிய உயிரினளவாகிய மாத்திரை இரண்டு.

ஒருமாத்திரை என்னுங் காலவளவையாவது கண்ணிமைப்பொழுது அல்லது கைந்நொடிப்பொழுது.

உக. உயிரெழுத்துக்களுள்ளே உகரமும் இகரமும் சிலவிடங்களில் அரைமாத்திரை ஒலித்து நிற்

லே வினாப்பொருளில் வரும்போது வினாவெழுத்தாம்.

உ-ம். யாவன், யாங்ஙனம் என வரும்.

௧௬. அகரத்துக்கு ஆகாரமும், இகரத்துக்கு ஈகாரமும், உகரத்துக்கு ஊகாரமும், எகரத்துக்கு ஏகாரமும், ஐகாரத்துக்கு இகரமும், ஒகரத்துக்கு ஓகாரமும், ஔகாரத்துக்கு உகரமும், ககரத்துக்கு ஙகரமும், சகரத்துக்கு ஞகரமும், டகரத்துக்கு ணகரமும், தகரத்துக்கு நகரமும், பகரத்துக்கு மகரமும், றகரத்துக்கு னகரமும் இனவெழுத்துக்களாம். இடையெழுத்தாறும் ஓரினமாகும்; அவை இவ்விரண்டோரினமாகாவாம்.

௧௭. உயிர்மெய்யெழுத்துக்களாவன பன்னிரண்டுயிரும் பதினெட்டுமெய்மேலும் தனித்தனி ஏறி வருதலாலாகிய இருநூற்றுப்பதினாறுமாம்.

அவை க, கா, கி, கீ முதலியவைகளாம்.

உயிர்மெய்க்குற்றெழுத்துத் தொண்ணூறு; உயிர்மெய்நெட்டெழுத்து நூற்றிருபத்தாறு: ஆக உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு.

உயிர்மெய்வல்லெழுத்து எழுபத்திரண்டு; உயிர்மெய் மெல்லெழுத்து எழுபத்திரண்டு; உயிர்மெய்யிடையெழுத்து எழுபத்திரண்டு; ஆக உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு.

கஅ. ஆய்தவெழுத்தாவது குற்றெழுத்துக்கும் உயிர்மெய்வல்லெழுத்துக்கும் நடுவே மூன்று புள்ளிவடிவையுடையதாய் வரும் ஓரெழுத்தாம்.

உ-ம். எஃகு, கஃசு, அஃது, பஃறி என வரும்.

கக. மேற்சொல்லப்பட்ட உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டும், உயிர்மெய் இருநூற்றுப்பதினாறும், ஆய்தம் ஒன்றும் ஆகிய இருநூற்று நாற்பத்தேழெழுத்துக்களும் தமிழ் நெடுங்கணக்கில் வழங்கிவருதல் கண்டுகொள்க.

---

## எழுத்துக்களின் மாத்திரை.

உ0. குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று; நெட்டெழுத்துக்கு மாத்திரை இரண்டு.

மெய்யெழுத்துக்கும் ஆய்தவெழுத்துக்கும் தனித்தனி மாத்திரை அரை.

உயிர்மெய்க்குற்றெழுத்துக்கு ஏறிய உயிரினளவாகிய மாத்திரை ஒன்று; உயிர்மெய்நெட்டெழுத்துக்கு ஏறிய உயிரினளவாகிய மாத்திரை இரண்டு.

ஒருமாத்திரை என்னுங் காலவளவையாவது கண்ணிமைப்பொழுது அல்லது கைந்நொடிப்பொழுது.

உக. உயிரெழுத்துக்களுள்ளே உகரமும் இகரமும் சிலவிடங்களில் அரைமாத்திரை ஒலித்து நிற்

கும். அவ்வுகரத்துக்குக் குற்றியலுகரமென்றும், அ வ்விகரத்துக்குக் குற்றியலிகரமென்றும், பெயராம்.

௨௨. குற்றியலுகரமாவது தனிக்குற்றெழுத்தல்லாத மற்றையெழுத்துக்களுக்குப் பின்னே மொழிகளினிறுதியில் வல்லினமெய்களில் ஏறி நிற்கும் உகரமாம்.

அக்குற்றியலுகரம், ஈற்றெழுத்தாகிய தன்னைத் தொடர்கின்ற அயலெழுத்தின் வகையினாலே, நெடிற்றொடர்க்குற்றியலுகரம், ஆய்தத்தொடர்க்குற்றியலுகரம், உயிர்த்தொடர்க்குற்றியலுகரம், வன்றொடர்க்குற்றியலுகரம், மென்றொடர்க்குற்றியலுகரம், இடைத்தொடர்க்குற்றியலுகரம் என ஆறுவகைப்படும். அவைகளுள், நெடிற்றொடர்மாத்திரம் இரண்டெழுத்துமொழியாகியும், மற்றையைந்துதொடரும் மூன்றெழுத்து முதலிய பலவெழுத்துமொழியாகியும் வரும்.

உ-ம். நாகு, ஆடு.....நெடிற்றொடர்க்குற்றியலுகரம்.
எஃகு, கஃசு.....ஆய்தத்தொடர்க்குற்றியலுகரம்.
வரகு, பலாசு...உயிர்த்தொடர்க்குற்றியலுகரம்.
கொக்கு, கச்சு.....வன்றொடர்க்குற்றியலுகரம்.
சங்கு, வண்டு...மென்றொடர்க்குற்றியலுகரம்.
அல்கு, எய்து...இடைத்தொடர்க்குற்றியலுகரம்.

௨௩. தனிக்குற்றெழுத்துக்குப் பின் வல்லின

மெய்களில் ஏறி நிற்கும் உகரமும், மெல்லினமெய் களிலும் இடையினமெய்களிலும் ஏறி நிற்கும் உகரமும் முற்றியலுகரமாம்.

உ-ம். நகு, கொசு, கடு, அது. எ-ம். சுணு, திரு, வழு. எ-ம். பூணு, வாரு. எ-ம். உருமு, கதவு. எ-ம். நெல்லு, கொள்ளு. எ-ம். வரும்.

உச. குற்றியலிகரமாவது யகரம் வந்து புணருமிடத்துக் குற்றியலுகரந் திரிந்த இகரமாம்.

உ-ம். நாகு + யாது = நாகியாது.
எஃகு + யாது = எஃகியாது.
வரகு + யாது = வரகியாது.
கொக்கு + யாது = கொக்கியாது.
சங்கு + யாது = சங்கியாது.
அல்கு + யாது = அல்கியாது.

அன்றியும் மியாவென்னும் அசைச்சொல்லிலே மகரத்தின்மேல் ஏறி நிற்கும் இகரமும் குற்றியலிகரமாம்.

உரு. பாட்டில் ஓசை குறைந்தவிடத்து, உயிரெழுத்துக்களுள்ளும், ஒற்றெழுத்துக்களுள்ளும், சில சில தம்மாத்திரைகளின் அதிகமாக ஒலிக்கும். அவ்வுயிரெழுத்துக்கு உயிரளபெடையென்றும், அவ்வொற்றெழுத்துக்கு ஒற்றளபெடை என்றும் பெயராம்.

உகூ. உயிரளபெடையாவன மொழிக்கு முதலிலாயினும் இடையிலாயினும் கடையிலாயினும் தம் மாத்திரையின் அதிகமாக ஒலித்து வருகின்ற நெட்டெழுத்துக்களேழுமாம். அளபெடுக்கின்ற நெட்டெழுத்துக்குப் பின் அதற்கினமாகிய குற்றெழுத்து அறிகுறியாக எழுதப்படும்.

உ-ம். ஆஅடை, ஈஇடு, ஊஉமை, ஏஎடு, ஐஇயம், ஓஒடு, ஔஉவை. எ-ம். பலாஅசு. எ-ம். பலாஅ. எ-ம். வரும்.

சிலவிடங்களிலே குற்றெழுத்து நெட்டெழுத்தாகிப் பின்னளபெடுக்கும்.

உ-ம். எழுதல் = எழூஉதல், வரும் = வரூஉம், குரீ = குரீஇ என வரும்.

உஎ. ஒற்றளபெடையாவன மொழிக்கு இடையிலாயினும் கடையிலாயினும் தம்மாத்திரையின் அதிகமாக ஒலித்து வருகின்ற ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள் என்னும் பத்துமெய்களும் ஆய்தமுமாம். அளபெடுக்கின்ற ஒற்றெழுத்துக்குப் பின் அவ்வொற்றெழுத்தே அறிகுறியாக எழுதப்படும். இவ்வொற்றளபெடை குறிற்கீழும் குறிலிணைக்கீழும் வரும்.

உ-ம். சங்ங்கு, பிஞ்ஞ்சு, கண்ண்டம், பந்ந்து, அம்ம்பு, அன்ன்பு, தெவ்வ்வர், மெய்ய்யர், செல்ல்க, கொள்ள்க, எஃஃகு. எ-ம். அரங்ங்கு. எ-ம். அங்ங்கனிந்த. எ-ம். மடங்ங்கலந்த. எ-ம். வரும்.

௨௮. குற்றியலுகரத்துக்கும் குற்றியலிகரத்துக்கும் தனித்தனி மாத்திரை அரை; உயிரளபெடைக்கு மாத்திரை மூன்று; ஒற்றளபெடைக்கு மாத்திரை ஒன்று.

௨௯. பண்டமாற்றலிலும், அழைத்தலிலும், புலம்பலிலும் இராகத்திலும், உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் தமக்குச் சொல்லிய அளவைக் கடந்து நீண்டொலிக்கும்.

---

## மு த னி லை.

௩0. பன்னிரண்டுயிரெழுத்துக்களும், உயிரேறிய க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ என்னும் ஒன்பது மெய்யெழுத்துக்களும் மொழிக்கு முதலில் நிற்கும் எழுத்துக்களாம்.

உ-ம். அணி, ஆடை, இலை, ஈரல், உரல், ஊர்தி, எழு, ஏணி, ஐயம், ஒளி, ஓடு, ஔவை. எ-ம். கரி, சரி, தலை, நன்மை, பந்து, மணி, வயல், யமன், ஞமலி. எ-ம். வரும்.

௩௧ இவைகளுள்ளே க, ச, த, ந, ப, ம என்னும் ஆறுமெய்களும் பன்னிரண்டுயிரோடும் மொழிக்கு முதலாகி வரும்.

உ-ம். களி, காளி, கிளி, கீரை, குளிர், கூடு, கெண்டை, கேழல், கைதை, கொண்டை, கோடை, கௌவை. எ-ம்.

சட்டி, சாந்து, சினம், சீர், சுக்கு, சூரல், செக்கு, சேவல், சையம், சொன்றி, சோறு, சௌரியம். எ-ம்.

தகை, தார், திதலை, தீமை, துளை, தூசு, தெளிவு, தேன், தையல், தொண்டு, தோடு, தௌவை. எ-ம்.

நஞ்சு, நாரி, நிலம், நீறு, நுகம், நூல், நெல், நேர்மை, நைதல், நொய்து, நோய், நௌவி. எ-ம்.

பந்து, பால், பிட்டு, பீடு, புள், பூண்டு, பெருமை, பேடு, பையல், பொன், போது, பௌவம். எ-ம்.

மனை, மாடு, மின்னல், மீன், முள், மூரி, மெய்ம்மை, மேதி, மையல், மொட்டு, மோகம், மௌவல். எ-ம். வரும்.

கஉ. வகரமெய் அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ, ஔ என்னும் எட்டுயிரோடு மொழிக்கு முதலாகி வரும்.

உ-ம். வளி, வாளி, விளி, வீடு, வெண்மை, வேலை, வையம், வௌவால் என வரும்.

கக. யகரமெய் அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ என்னும் ஆறுயிரோடு மொழிக்கு முதலாகி வரும்.

உ-ம். யவனர், யானை, யுகம், யூகம், யோகம், யௌவனம் என வரும்.

கச. ஞகரமெய் அ, ஆ, எ, ஒ என்னும் நான்குயிரோடு மொழிக்கு முதலாகி வரும்.

உ-ம். ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கல் என வரும்.

---

## இறுதிநிலை.

கரு. எகரம் ஒழிந்த பதினோருயிர்களும், ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் என்னும் பதினொரு மெய்களுமாகிய இருபத்திரண்டெழுத்துக்களும் மொழிக்கிறுதியில் நிற்கும் எழுத்துக்களாம்.

உ-ம். விள, பலா, கிளி, தீ, கடு, பூ, சே, கை, நொ, போ, வெள, உரிஞ், மண், வெரிந், மரம், பொன், காய், வேர், வேல், தெவ், யாழ், வாள் என வரும்.

---

## எழுத்துக்களின் சாரியை.

கசா. உயிர்நெட்டெழுத்துக்கள் காரச்சாரியை பெறும்; அவைகளுள் ஐ ஔ இரண்டும் காரச்சாரியையேயன்றிக் கான்சாரியையும் பெறும்.

உ-ம். ஆகாரம், ஈகாரம், ஊகாரம், ஏகாரம், ஐகாரம், ஓகாரம், ஔகாரம். எ-ம். ஐகான், ஔகான். எ-ம். வரும்.

உயிர்க்குற்றெழுத்துக்களும் உயிர்மெய்க்குற்றெழுத்துக்களும் கரம், காரம், கான் என்னும் மூன்று சாரியைகள் பெறும்.

உ-ம். அகரம், அகாரம், அஃகான். எ-ம். ககரம், ககாரம், கஃகான். எ-ம். வரும்.

மெய்யெழுத்துக்கள் அ என்னுஞ்சாரியையும், அதனோடு கரம் காரம் கான் என்னுஞ் சாரியைகளும் பெறும்.

உ-ம். க, ங. எ-ம். ககரம், ககாரம், கஃகான்; ஙகரம், ஙகாரம், ஙஃகான். எ-ம். வரும்.

உயிர்மெய்நெட்டெழுத்துக்கள் சாரியை பெற்றும், மெய்கள் சாரியை பெறாமலும், இயங்காவாம்.

## போலியெழுத்துக்கள்.

௲எ. அகரத்தோடு யகரமெய் சேர்ந்து ஐகாரம் போன்றும், அகரத்தோடு வகரமெய் சேர்ந்து ஔகாரம் போன்றும், ஒலிக்கும்.

உ-ம். ஐயன் = அய்யன். எ-ம். ஔவை = அவ்வை. எ-ம். வரும்.

எழுத்தியல் முற்றிற்று.

# பதவியல்.

௲அ. பதமாவது ஓரெழுத்தாலாயினும் இரண்டு முதலிய பலவெழுத்துக்களாலாயினும் ஆக்கப்பட்டுப் பொருளை அறிவிப்பதாம். அது பகாப்பதமும் பகுபதமுமெனெ இருவகைப்படும்.

௩௯. பகாப்பதமாவது பகுக்கப்படாத இயல்பையுடைய பதமாம். அது பெயர்ப்பகாப்பதம், வினைப்பகாப்பதம், இடைப்பகாப்பதம், உரிப்பகாப்பதமென நான்கு வகைப்படும்.

உ - ம். நிலம், நீர், மரம்.......... பெயர்ப்பகாப்பதம்.
நட, வா, உண்........... வினைப்பகாப்பதம்.
மற்று, ஏ, ஓ.............இடைப்பகாப்பதம்.
உறு, தவ, நனி............உரிப்பகாப்பதம்.

௪0. பகுபதமாவது பகுக்கப்படும் இயல்பையுடைய பதமாம். அது பெயர்ப்பகுபதம் வினைப்பகுபதமென இருவகைப்படும். அவற்றுள் வினைப்பகுபதம் தெரிநிலைவினைப்பகுபதமும் குறிப்புவினைப்பகுபதமுமென இருவகைப்படும்.

உ - ம். பொன்னன்........பெயர்ப்பகுபதம்.
நடந்தான்.........தெரிநிலைவினைப்பகுபதம்.
பெரியன்..........குறிப்புவினைப்பகுபதம். *

---

## பகுபதவுறுப்பு.

௪௧. பகுபதத்துக்கு உறுப்புக்கள் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என ஆறும். பகுபதம், இவ்வாறுறுப்புக்களுள்ளும் பகுதி விகு

* தெரிநிலைவினையும் குறிப்புவினையும் பகுபதமாகும் எனவே, அவ்விருவகைவினையாலணையும்பெயர்களும் பகுபதமாகும் என்பது பெறப்படும்.

தி என்னும் இரண்டு முதலியவைகளினால், முடிவு பெறும்.

உ-ம். கூனி........கூன், இ எனப் பகுதி விகுதி என்னும் இரண்டுறுப்பால் முடிந்தது.

உண்டான்...உண், ட், ஆன் எனப் பகுதி, விகுதி, இடைநிலை என்னும் மூன்றுறுப்பால் முடிந்தது.

உண்டனன்...உண், ட், அன், அன் எனப் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை என்னும் நான்குறுப்பால் முடிந்தது.

பிடித்தனன்...பிடி, த், த், அன், அன் எனப் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி என்னும் ஐந்துறுப்பால் முடிந்தது.

நடந்தனன்...நட, த், த், அன், அன் எனப் பகுதி முதலிய ஐந்தும் பெற்று, சந்தியால் வந்த தகரவல்லொற்று நகரமெல்லொற்றாதலாகிய விகாரமும் பெற்று, ஆறுறுப்பால் முடிந்தது.

---

## பகுதி.

சஉ. பகுதிகளாவன பகுபதங்களின் முதலிலே நிற்கும் பகாப்பதங்களாம்.

சங. பெயர்ப்பகுபதங்களுக்குப் பெரும்பாலும் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் எ

ன்னும் அறுவகைப் பெயர்ச்சொற்களும், சுறுபான்மை சுட்டிடைச்சொற்கள், வினாவிடைச்சொற்கள், பிற மற்று என்னும் இடைச்சொற்களும் பகுதிகளாய் வரும்.

உ-ம். பொன்னன், நிலத்தன், தையான், பல்லன், கரியன், நடையன். எ-ம். அவன், இவன், உவன். எ-ம். எவன், ஏவன், யாவன். எ-ம். பிறன், மற்றையான். எ-ம். வரும்.

சச. வினைக்குறிப்புப்பகுபதங்களுக்கு மேற்சொல்லப்பட்டனவாகிய அறுவகைப்பெயர்ச்சொற்களும் பகுதிகளாய் வரும்.

உ-ம். பொன்னன், நிலத்தன், தையான், பல்லன், கரியன், நடையன் என வரும்.

சரு. மை விகுதி புணர்ந்துநின்ற செம்மை கருமை முதலிய பண்புப்பெயர்கள் விகுதி புணரும்பொழுது பெரும்பாலும் விகாரப்பட்டு வரும். இவை விகாரப்படுதல் பதப்புணர்ச்சிக்குங் கொள்க.

உ-ம். அணியன்.........அணிமையின் மைவிகுதி கெட்டது.

கரியன்.........கருமையின் மைவிகுதி கெட்டு, நடுவுகரம் இகரமாய்த்திரிந்தது.

பாசி...............பசுமையின் மைவிகுதி கெட்டு, முதல் நீண்டது.

பேரறிவு.........பெருமையின் மைவிகுதியோடு நடு நின்ற உகரவுயிர் கெட்டு முதல் நீண்டது.

கருங்குதிரை....கருமையின் மை விகுதி கெட்டு, வரும் வல்லெழுத்திற்கு இன மெல்லெழுத்து மிகுந்தது.

பைந்தார்......பசுமையின் மை விகுதியோடு நடு நின்ற சுகரவுயிர்மெய் கெட்டு, முதலகாம் ஐகாரமாய்த் திரிந்து, வரும் வல்லெழுத்துக்கு இனமெல்லெழுத்து மிகுந்தது.

வெற்றிலை.......வெறுமையின் மைவிகுதி கெட்டு, நடுநின்ற மெய் இரட்டித்தது.

சேதாம்பல்......செம்மையின் மைவிகுதி கெட்டு, முதல் நீண்டு, நடு நின்ற மகரமெய் தகரமெய்யாய்த் திரிந்தது.

சசு. தெரிநிலைவினைப்பகுபதங்களுக்குப் பெரும்பாலும் நட வா முதலிய வினைச்சொற்களும், சிறுபான்மை பெயர்ச்சொல் இடைச்சொல் உரிச்சொற்களும் பகுதிகளாய் வரும்.

| | | |
|---|---|---|
| உ-ம். நட, | நடந்தான் | வினையடி. |
| வா, | வந்தான் | |
| நில், | நின்றான் | |
| காண், | கண்டான் | |

| | | |
|---|---|---|
| சித்திரம், | சித்திரித்தான் | பெயரடி. |
| கடைக்கண், | கடைக்கணித்தான் | |
| போல், | பொன்போன்றான் | இடையடி. |
| நிகர், | புலிநிகர்த்தான் | |
| சால், | சான்றான் | உரியடி. |
| மாண், | மாண்டான் | |

சஎ. தெரிநிலைவினைப்பகுதிகள் விகுதி முதலி யவற்றோடு புணரும்போது இயல்பாகியும் விகாரமா கியும் வரும்.

உ-ம். (க.) தொழு, தொழுதான் } உண், உண்டான் } இயல்பாகி வந்தன.

(உ.) சேறல்............செல்லென்பகுதி முதல் நீண்டது.

தந்தான்............தாவென்பகுதி முதல் குறுகியது.

தருகின்றான்......தாவென்பகுதி முதல் குறுகி, ருகரவுயிர்மெய் விரியப்பெற்றது.

செத்தான்.........சாவென்பகுதி முதலாகாரம் எகரமாய்த் திரிந்தது.

விராவினான்......விரவென்பகுதி நடுக்குறில் நீண்டது.

கொணர்ந்தான்...கொணாவென்பகுதியீற்று நெடில் குறுகி, ரகரமெய் விரிந்தது.

கற்றான்...... ...கல்லென் பகுதியீற்று மெய் வருமெழுத்தாய்த் திரிந்தது.

சென்றான்... ...செல்லென்பகுதியீற்று மெய் வருமெழுத்துக்கு இனமாய்த் திரிந்தது.

௩௮. தெரிநிலைவினைப்பகுதிகள் வி, பி முதலிய விகுதி பெற்றேனும், விகாரப்பட்டேனும், விகாரப்பட்டு விகுதி பெற்றேனும், பிறவினைப்பகுதிகளாய் வரும்.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். (க.) | செய், | செய்வி, | செய்வித்தான். |
| | நட, | நடப்பி, | நடப்பித்தான். |
| (உ.) | திருந்து, | திருத்து, | திருத்தினான். |
| | ஆடு, | ஆட்டு, | ஆட்டினான். |
| | தேறு, | தேற்று, | தேற்றினான். |
| | உருகு, | உருக்கு, | உருக்கினான். |
| (ஈ.) | திருத்து, | திருத்துவி, | திருத்துவித்தான். |
| | ஆட்டு, | ஆட்டுவி, | ஆட்டுவித்தான். |
| | தேற்று, | தேற்றுவி, | தேற்றுவித்தான். |
| | உருக்கு, | உருக்குவி, | உருக்குவித்தான். |

௩௯. பொன்னன், கரியன் முதலானவை எட்டுவேற்றுமைகளுள் ஒன்றையேற்கும்போது பெயர்ப்பகுபதங்களாம்; முக்காலங்களுள் ஒன்றைக் குறிப்பாகக் காட்டும்போது வினைக்குறிப்புமுற்றுப்பகுபத

ங்களாம்; காலங்காட்டுதலோடு வேற்றுமையேற்கு ம்போது குறிப்புவினையாலணையும் பெயர்ப்பகுபதங் களாம். இவையே இம்மூன்றுக்கும் வேறுபாடாம்.

ருO. நடந்தான், வந்தான் முதலானவை கால ங்காட்டும் போது தெரிநிலைவினை முற்றுப் பகுபதங் களாம்; காலங்காட்டுதலோடு வேற்றுமையேற்கும் போது தெரிநிலைவினையாலணையும் பெயர்ப்பகுபதங் களாம். இவையே இவ்விரண்டுக்கும் வேறுபாடாம்.

---

## வி கு தி.

ருக. விகுதிகளாவன பகுபதங்களின் இறுதியி லே நிற்கும் இடைப்பதங்களாம்.

ருஉ. பெயர்விகுதிகள் அன், ஆன், மன், மா ன், ன், அள், ஆள், இ, ள், அர், ஆர், மார், கள், ர், து, அ, வை, வ், தை, கை, பி, முன், அல் என னும் இருபத்துமூன்றும் பிறவுமாம்.

உ-ம். குழையன், வானத்தான், வடமன், கோமான், பிற ன், குழையள், வானத்தாள், அரசி, பிறள், கு ழையர், வானத்தார், தேவிமார், கோக்கள், பிற ர், அது, குழைந்தாளன, அவை, அவ், எந்தை, எங்கை, எம்பி, எம்முன், தோன்றல் என வரும்.

ருந. தொழிற்பெயர்விகுதிகள் தல், அல், அ ம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு,

பாடு, ஆரவு, ஆனை, மை, து என்னும் பத்தொன்பதும் பிறவுமாம்.

உ-ம். நடத்தல், ஆடல், வாட்டம், கொலை, நடக்கை, பார்வை, போக்கு, நடப்பு, வரவு, மறதி, புணர்ச்சி, புலவி, விக்குள், சாக்காடு, கோட்பாடு, தோற்றரவு, வாரானை, நடவாமை, பாய்த்து என வரும்.

மை விகுதி, செய்தமை செய்கின்றமை என இறந்தகாலவிடைநிலை நிகழ்காலவிடைநிலைகளோடு கூடியும், வரும்.

துவ்விகுதி, அவர் செய்தது, செய்கின்றது, செய்வது என முக்காலவிடைநிலைகளோடு கூடியும் வரும்.

௫௪. பண்புப்பெயர்விகுதிகள் மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர் என்னும் பத்தும் பிறவுமாம்.

உ-ம். நன்மை, தொல்லை, மாட்சி, மாண்பு, மழவு, நன்கு, நன்றி, நன்று, நலம், நன்னர் என வரும்.

௫௫. தெரிநிலைவினைமுற்றுவிகுதிகள் அன், ஆன், அள், ஆள், அர், ஆர், ப, மார், அ, ஆ, கு, டு, து, று, என், ஏன், அல், அம், ஆம், எம், ஏம், ஓம், கும், டும், தும், றும், ஐ, ஆய், இ, இர், ஈர், க, இய, இயர், உ, ஆல், ஏல், காண், மின், உம் என்னும் நாற்பதும் பிறவுமாம்.

உ - ம். நடந்தனன், நடந்தான், நடந்தனள், நடந்தாள், நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார், நடந்தன, நடவா, உண்கு, உண்டு, நடந்தது, கூயிற்று, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், உண்கும், உண்டும், வருதும், சேறும், நடந்தனை, நடந்தாய், நடந்தி, நடந்தனிர், நடந்தீர், வாழ்க, வாழிய, வாழியர், அருளு, மருல், அறேல், சொல்லிக்காண், நடப்பின், உண்ணும் என வரும்.

௫௯. குறிப்புவினைமுற்று விகுதிகள் அன், ஆன், அள், ஆள், அர், ஆர், அ, டு, து, று, என், ஏன், அம், ஆம், எம், ஏம், ஓம், ஐ, ஆய், இ, இர், ஈர் என்னும் இருபத்திரண்டும் பிறவுமாம்.

உ - ம். கரியன், கரியான், கரியள், கரியாள், கரியர், கரியார், கரியன, குழைக்காட்டு, கரிது, குழையிற்று, கரியென், கரியேன், கரியம், கரியாம், கரியெம், கரியேம், கரியோம், கரியை, கரியாய், வில்லி, கரியிர், கரியீர் என வரும்.

௬௰. தெரிநிலைவினைப்பெயரெச்சவிகுதிகள் அ, உம் என்னும் இரண்டுமாம்.

உ - ம். செய்த, செய்கின்ற, செய்யும் என வரும்.

குறிப்புவினைப்பெயரெச்சவிகுதி அ ஒன்றேயாம். உம் விகுதி இடைநிலையேலாது தானே எதிர்கால

ங்காட்டலாற் குறிப்புவினைப்பெயரெச்சத்துக்கு வாராது.

உ - ம். கரிய என வரும்.

௫௮. தெரிநிலைவினையெச்சவிகுதிகள் உ, இ, ய், பு, ஆ, ஊ, என, அ, இன், ஆல், கால், ஏல், எனின், ஆயின், ஏனும், கு, இய, இயர், வான், பான், பாக்கு, கடை, வழி, இடத்து, உம், மல், மை, மே என்னும் இருபத்தெட்டும் பிறவுமாம். இவற்றுள், இறுதியிற் கூறிய மல், மை, மே என்னும் மூன்று விகுதிகளும் எதிர்மறையில் வரும்.

உ - ம். நடந்து, ஓடி, போய், உண்குபு, உண்ணா, உண்ணூ, உண்ணென, உண்ண, உண்ணின், உண்டால், உண்டக்கால், உண்டானேல், உண்டானெனின், உண்டானாயின், உண்டானேனும், உணற்கு, உண்ணிய, உண்ணியர், வருவான், உண்பான், உண்பாக்கு, செய்தக்கடை, செய்தவழி, செய்தவிடத்து, காண்டலும், உண்ணாமல், உண்ணாமை, உண்ணாமே என வரும்.

குறிப்புவினையெச்சவிகுதிகள் அ, றி, து, ஆல், மல், கடை, வழி, இடத்து என்னும் எட்டும் பிறவுமாம்.

உ - ம். மெல்ல, அன்றி, அல்லது, அல்லால், அல்லாமல், அல்லாக்கடை, அல்லாவழி, அல்லாவிடத்து என வரும்.

௫௯. பிறவினைவிகுதிகள் வி, பி, கு, சு, டு, து, பு, று என்னும் எட்டுமாம்.

உ-ம். செய்வி, நடப்பி, போக்கு, பாய்ச்சு, உருட்டு, நடத்து, எழுப்பு, துயிற்று என வரும்.

௬0. இ, ஐ, அம் என்னும் மூன்று விகுதிகளும் வினைமுதற்பொருளையும் செயப்படுபொருளையும் கருவிப்பொருளையும் உணர்த்தும்.

உ-ம். அலரி, பறவை, எச்சம் என்பன வினைமுதற்பொருளை உணர்த்தின. இவை முறையே அலர்வது, பறப்பது, எஞ்சுவது எனப் பொருள்படும்.

ஊருணி, தொடை, தேட்டம் என்பன செயப்படுபொருளை உணர்த்தின. இவை முறையே ஊரானுண்ணப்படுவது, தொடுக்கப்படுவது, தேடப்படுவது எனப் பொருள் படும்.

மண்வெட்டி, பார்வை, நோக்கம் என்பன கருவிப்பொருளை உணர்த்தின. இவை முறையே மண்வெட்டற்கருவி, பார்த்தற்கருவி, நோக்கற்கருவி எனப் பொருள்படும்.

௬௧. இவையாவையுங்கூறிய விகுதிகளேயன்றிப் பிறவிகுதிகளும் உண்டு. அவை வருமாறு:—

விடு, ஒழி, விகுதிகள் துணிவுப்பொருளை உணர்த்தும்.

உ-ம். வந்துவிட்டான், கெட்டொழிந்தான் என வரும்.

கொள்விகுதி தற்செயலுணர்த்தும்.

உ-ம். அடித்துக்கொண்டான் என வரும்.

படு, உண் விகுதிகள் செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும்.

உ-ம். கட்டப்பட்டான், கட்டுண்டான் என வரும்.

மைவிகுதி தன்மைப்பொருளுணர்த்தும்.

உ-ம். பொன்மை, ஆண்மை என வரும்.

இரு, இடு என்பன தமக்கென வேறுபொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் வரும்.

உ-ம். எழுந்திருக்கின்றான், உரைத்திடுகின்றான் எனவ் ரும்.

---

## புணர்ந்து கெடும் விகுதி.

௬உ. முன்னிலையேவலொருமை ஆய்வி குதியும் பெயரெச்சவிகுதியும், தொழிற்பெயர்விகுதியும், வினைமுதற்பொருளை உணர்த்தும் இகரவிகுதியும், செயப்படுபொருளை உணர்த்தும் ஐவிகுதியும், பகுதியோடு புணர்ந்து பின் கெடுதலும் உண்டு. கெடினும், புணர்ந்து நின்றாற்போலவே தம்பொருளை உணர்த்தும்,

உ-ம். நீ நட, நீ நடப்பி.........இவைகளிலே ஆய் விகுதி புணர்ந்து கெட்டது.

கொல்களிறு, ஓடாக்குதிரை...இவைகளிலே பெயரெச்சவிகுதிகள் புணர்ந்து கெட்டன.

அடி, கேடு, இடையீடு ......இவைகளிலே தல்லென்னுந் தொழிற்பெயர் விகுதி புணர்ந்து கெட்டது.

காய், தளிர், பூ, கனி........இவைகளிலே வினைமுதற்பொருளை உணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்டது.

ஊண், தின், எழுத்து... ......இவைகளிலே செயப்படுபொருளை உணர்த்தும் ஐவிகுதி புணர்ந்து கெட்டது.

---

## இடைநிலை.

கஙக. இடைநிலைகளாவன பகுபதங்களிலே பகுதிக்கும் விகுதிக்கும் நடுவிலே நிற்கும் இடைச்சொற்களாம். அவை காலங்காட்டாவிடைநிலையும், காலங்காட்டுமிடைநிலையுமென இரண்டுவகைப்படும்.

கஙச. காலங்காட்டாவிடைநிலைகள் பெயர்ப்பகுபதங்களுக்கு வரும்.

உ - ம். அறிஞன்........ ...... ...[ஞ இடைநிலை.]
ஓதுவான்......... .........[வ இடைநிலை.]
வலைச்சி......................[ச இடைநிலை.]
வண்ணாத்தி...... ... ......[த இடைநிலை.]

சுரு. காலங்காட்டுமிடைநிலைகள் தெரிநிலைவினைப் பகுபதங்களுக்கு வரும்.

அவை இறந்தகாலவிடைநிலையும், நிகழ்காலவிடைநிலையும், எதிர்காலவிடைநிலையுமென மூன்றுவகைப்படும்.

சுசு. இறந்தகாலவிடைநிலைகள் த், ட், ற், இன் என்னும் நான்குமாம்.

உ - ம். செய்தான், உண்டான், தின்றான், ஓடினான் என வரும்.

சிறுபான்மை இன்னிடைநிலை போனான் என இகரங்குறைந்தும், எஞ்சியது என னகரமெய் குறைந்தும் வரும்.

போயது என யகரமெய் இறந்தகாலவிடைநிலையாயும் வரும்.

சுஎ. நிகழ்காலவிடைநிலைகள் ஆநின்று, கின்று, கிறு என்னும் மூன்றுமாம்.

உ - ம். நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான் என வரும்.

சூஅ. எதிர்காலவிடைநிலைகள் ப், வ் என்னும் இரண்டுமாம்.

உ-ம். நடப்பான், செய்வான் என வரும்.

---

## எதிர்மறையிடைநிலை.

சூகூ. இல், அல், ஆ என்னும் மூன்றும் எதிர்மறையிடைநிலைகளாம். இவற்றுள் ஆகாரவிடைநிலை வருமெழுத்து மெய்யாயிற் கெடாதும், உயிராயிற் கெட்டும், வரும்.

உ-ம். நடந்திலன், நடக்கின்றிலன். எ-ம். நடக்கலன். எ-ம். நடவாதான், நடவான், நடவேன். எ-ம். வரும். நடவாதான் என்பதிலே தகரமெய் எழுத்துப்பேறு.

---

## காலங்காட்டும் விகுதி.

எ0 சிலவிகுதிகள் இடைநிலையேலாது தாமே காலங்காட்டும். அவை வருமாறு:—

து, தும், று, றும் என்னும் விகுதிகள் இறந்த காலமும் எதிர்காலமுங்காட்டும்.

உ-ம். வந்து, (= வந்தேன்.) வந்தும், (= வந்தேம்.) வருது, (= வருவேன்.) வருதும், (= வருவேம்.) எ-ம். சென்று, (= சென்றேன்.) சென்றும், (= சென்றேம்.) சேறு, (= செல்வேன்.) சேறும், (= செல்வேம்.) எ-ம். வரும்.

கு, கும் என்னும் விகுதிகள் எதிர்காலங்காட்டும்.

உ-ம். உண்கு, ( = உண்பேன்.) உண்கும், ( = உண்பேம்.) என வரும்.

டு, டும் என்னும் விகுதிகள் இறந்தகாலங்காட்டும்.

உ-ம். உண்டு, ( = உண்டேன்.) உண்டும், ( = உண்டேம்.) என வரும்.

இ என்னும் முன்னிலைவினைமுற்றுவிகுதியொன்றும், ப, மார் என்னும் படர்க்கைவினைமுற்று விகுதியிரண்டும், க, இய, இயர், அல் என்னும் வியங்கோண்முற்று விகுதி நான்கும், ஆய், ஐ, ஆல், எல், காண், மின், உம் என்னும் முன்னிலையேவன்முற்றுவிகுதியேழும், ஆகிய பதினான்கு விகுதிகளும் எதிர்காலங்காட்டும்.

உ-ம். சேறி, ( = செல்வாய்.) எ-ம். நடப்ப, ( = நடப்பார்.) நடமார், ( = நடப்பார்.) எ-ம். வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல். எ-ம். நடவாய், அருளை, மருஆல், அழேல், சொல்லிக்காண், நடமின், உண்ணும். எ-ம். வரும்.

உம் என்னுஞ் செய்யுமென் முற்றுவிகுதி நிகழ்காலமும் எதிர்காலமுங்காட்டும்.

உ-ம். உண்ணும் என வரும்.

எச்சவிகுதிகள் காலங்காட்டல் வினையியலிற்கண்டு கொள்க.

காலங்காட்டும் பகுதி.

எக. டு, டு, று என்னும் மூன்றுயிர்மெய்களை இறுதியாக உடைய சில குறிலிணைப்பகுதிகள் விகாரப்பட்டு இறந்தகாலங்காட்டும்.

உ-ம். புக்கான், விட்டான், பெற்றான் என வரும்.

சாரியை.

எஉ. சாரியைகள் அன், ஆன், அம், ஆம், அல், அத்து, அற்று, இன், இற்று, தன், தான், தம், தாம், நம், நும், அ, ஆ, உ, எ, ஐ, கு, து, ன் என்னும் இருபத்துமூன்றும் பிறவுமாம்.

உ-ம். நடந்தனன், ஒருபாற்கு, புளியங்காய், புற்றுஞ் சோறு, தொடையல், அகத்தன், பலவற்றை வண்டின்கால், பதிற்றுப்பத்து, அவன்றன்னை, அவன்றான், அவர்தம்மை, அவர்தாம், எல்லாநம்மையும், எல்லீர் நும்மையும், நடந்தது, இல்லாப்பொருள், உண்ணுவான், ஒன்றேகால், இரட்டைப்பிள்ளை, உண்குவான், செய்துகொண்டான், ஆன் என வரும்.

சந்தி.

எங. சந்திகளாவன புணரியலிற் சொல்லப்படு

வனவாகிய தோன்றல் முதலிய புணர்ச்சிவிகாரங்களாம்.

---

## விகாரம்.

எ௪. விகாரங்களாவன மெல்லினமெய்யை வல்லினமெய்யாக்கலும், வல்லினமெய்யை மெல்லினமெய்யாக்கலும், குற்றெழுத்தை நெட்டெழுத்தாக்கலும், நெட்டெழுத்தைக் குற்றெழுத்தாக்கலும், இல்லாத எழுத்தை விரித்தலும், உள்ள எழுத்தைத் தொகுத்தலும் ஆம்.

பதவியன் முற்றிற்று.

---

## புணரியல்.

எ௫. புணர்ச்சியாவது நிலைமொழியும் வருமொழியும் ஒன்றுபடப் புணர்வதாம்.

எ௬. அப்புணர்ச்சி வேற்றுமைப்புணர்ச்சியும் அல்வழிப்புணர்ச்சியுமென இரண்டு வகைப்படும்.

எஎ. வேற்றுமைப்புணர்ச்சியாவது ஐ, ஆல், கு, இன், அது, கண் என்னும் ஆறுருபுகளும் இடையில் மறைந்தாயினும் வெளிப்பட்டாயினும் வரச் சொற்கள் புணர்வதாம்.

உ - ம்.

| வேற்றுமைத்தொகை. | | வேற்றுமைவிரி. |
|---|---|---|
| மரம்வெட்டினான்... | [ஐ] | மரத்தைவெட்டினான். |
| கல்லெறிந்தான்... | [ஆல்] | கல்லாலெறிந்தான். |
| கொற்றன்மகன்... | [கு] | கொற்றனுக்குமகன். |
| மலைவீழருவி...... | [இன்] | மலையின்வீழருவி. |
| சாத்தன்கை...... | [அது] | சாத்தனதுகை. |
| மலைநெல்......... | [கண்] | மலையின்கணெல். |

௭௮. அல்வழிப்புணர்ச்சியாவது வேற்றுமையல்லாத வழியிற்புணர்வதாம். அது வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்னும் ஐந்துதொகைநிலைத்தொடரும், எழுவாய்த்தொடர், விளித்தொடர், தெரிநிலைவினைமுற்றுத்தொடர், குறிப்புவினைமுற்றுத்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத்தொடர், இடைச்சொற்றொடர், உரிச்சொற்றொடர், அடுக்குத்தொடர் என்னும் ஒன்பது தொகாநிலைத்தொடருமாகப் பதினான்குவகைப்படும்.

தொகைநிலைத்தொடர்களுக்கு உதாரணம்.

(௧.) கொல்யானை.........வினைத்தொகை.

(௨.) கருங்குதிரை.......பண்புத்தொகை.

சாரைப்பாம்பு.......இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

(௩.) மதிமுகம்........... உவமைத்தொகை.

(௪.) இராப்பகல்.......... உம்மைத்தொகை.

(௫.) பொற்றொடி.......அன்மொழித்தொகை.

தொகாநிலைத்தொடர்களுக்கு உதாரணம்.

(௧.) சாத்தன்வந்தான்...எழுவாய்த்தொடர்.

(௨.) சாத்தாவா........ விளித்தொடர்.

(௩.) வந்தான்சாத்தன்..தெரிநிலைவினைமுற்றுத்தொடர்

(௪.) பொன்னனிவன்... குறிப்புவினைமுற்றுத்தொடர்.

(௫.) வந்தசாத்தன்...... பெயரெச்சத்தொடர்.

(௬.) வந்துபோனான்... வினையெச்சத்தொடர்.

(௭.) மற்றொன்று...... இடைச்சொற்றொடர்.

(௮.) நனிபேதை .......உரிச்சொற்றொடர்.

(௯.) பாம்பு பாம்பு.....அடுக்குத்தொடர்.

௭௯. இப்படி மொழிகள் வேற்றுமைவழியாலும் அல்வழியாலும் புணருமிடத்து இயல்பாகவாயினும் விகாரமாகவாயினும் புணரும்.

௮0. இயல்புபுணர்ச்சியாவது நிலைமொழியும் வருமொழியும் விகாரமின்றிப் புணர்வதாம்.

உ - ம். பொன்மணி, சாத்தன்கை என வரும்.

௮௧. விகாரப்புணர்ச்சியாவது நிலைமொழியேனும், வருமொழியேனும், இவ்விருமொழியுமேனும், தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் மூன்று விகாரங்களுள் ஒன்றையாயினும் பலவற்றையாயினும் பெற்றுப் புணர்வதாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| உ-ம். | வாழை | + | பழம் | = | வாழைப்பழம் | தோன்றல். |
| | மண் | + | குடம் | = | மட்குடம் | திரிதல். |
| | மரம் | + | வேர் | = | மரவேர் | கெடுதல். |
| | நிலம் | + | பனை | = | நிலப்பனை | கெடுதல், தோன்றல். |
| | பனை | + | காய் | = | பனங்காய் | கெடுதல், தோன்றல், திரிதல். |

---

அஉ. தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் இவ் விகாரமூன்றும், மயக்கவிதி இன்மை பற்றியும், அல்வழி வேற்றுமைப்பொருளுக்கம் பற்றியும் வரும்.

---

## மயங்கா எழுத்துக்கள்.

அங. உயிரோடு உயிர்க்கு மயக்கவிதி இன்மையால், உயிரீற்றின்முன் உயிர் வரின், இடையே உடம்படு மெய்யென ஒன்று தோன்றும்.

உடம்படுமெய்யாவது வந்த உயிருக்கு உடம்பாக அடுக்கும் மெய். நிலைமொழியீற்றினும் வருமொழி முதலினும் நின்ற உயிர்களை உடம்படுத்தும் மெய் எனினும் பொருந்தும். உடம்படுத்தலெனினும் உடன்படுத்தலெனினும் ஒக்கும்.

அச. மெய்யீற்றின்முன் மயங்குதற்கு உரியதல்லாத மெய் வரின், நிலைமொழியீறேனும், வருமொழி முதலேனும், இவ்விரண்டுமேனும் விகாரப்படும்.

அ௫. மொழிக்கு ஈறாகுமெனப்பட்ட பதினொரு மெய்களின் முன்னும், மொழிக்கு முதலாகுமெனப்பட்ட ஒன்பது மெய்களும் புணரும்போது, மயங்குதற்கு உரியனவல்லாத மெய்களைச் சொல்வாம்.

லகர ளகரங்களின் முன்னே த ஞ ந ம என்னும் நான்கும் மயங்கா. ணகர னகரங்களின் முன்னே த ந என்னும் இரண்டும் மயங்கா. மகரமெய்யின்முன்னே க ச த ஞ ந என்னும் ஐந்தும் மயங்கா. ஞகாரத்தின்முன்னே சகரமும் யகரமுமல்லாத ஏழும் மயங்கா. நகரத்தின்முன்னே தகரமும்யகரமு மல்லாத ஏழும்மயங்கா. வகரத்தின்முன்னே யகரமல்லாத எட்டும் மயங்கா.

---

## மெய்யீற்றின் முன் உயிர் புணர்தல்.

அ௬. தனிக்குற்றெழுத்தைச் சாராத மெய்யீற்றின் முன் உயிர்வந்தால், வந்தவுயிர் அந்தமெய்யின்மேல் ஏறும்.

உ-ம். ஆண் + அழகு = ஆணழகு.
மரம் + உண்டு = மரமுண்டு.

அ௭. தனிக்குற்றெழுத்தைச் சார்ந்த மெய்யீற்றின் முன் உயிர் வந்தால், அந்தமெய் இரட்டிக்கும்; இரட்டித்த மெய்யின்மேல் வந்தவுயிர் ஏறும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உ-ம். | கல் | + | எறிந்தான் | = | கல்லெறிந்தான். |
| | பொன் | + | அழகிது | = | பொன்னழகிது. |

---

## உயிரீற்றின் முன் உயிர் புணர்தல்.

௩௮. இ ஈ ஐ என்னும் மூன்றுயிரீற்றின் முன்னும் உயிர்முதன்மொழி வந்தால், இடையில் யகரம் உடம்படுமெய்யாக வரும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உ-ம். | கிளி | + | அழகு | = | கிளியழகு. |
| | தீ | + | எரிந்தது | = | தீயெரிந்தது. |
| | பனை | + | ஓலை | = | பனையோலை. |

௩௯. அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்னும் ஏழுயிரீற்றின்முன்னும் உயிர்முதன்மொழி வந்தால், இடையில் வகரம் உடம்படுமெய்யாக வரும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உ-ம். | பல | + | அணி | = | பலவணி. |
| | பலா | + | இலை | = | பலாவிலை. |
| | திரு | + | அடி | = | திருவடி. |
| | பூ | + | அரும்பு | = | பூவரும்பு. |
| | நொ | + | அழகா | = | நொவ்வழகா. |
| | கோ | + | அழகு | = | கோவழகு. |
| | கௌ | + | அழகு | = | கௌவழகு. |

கோ என்பதன்முன் இல் என்னும் பெயர் வந்தால், இடையில் வகரம் வராது யகரம் வரும்.

உ-ம். கோ + இல் = கோயில்.

ஒரோவிடத்துக் கோவில் எனவும் வரும்.

௩௦. ஏகாரவுயிரீற்றின்முன் உயிர்முதன்மொழி வந்தால், இடையில் யகரமாயினும், வகரமாயினும், உடம்படுமெய்யாக வரும்.

உ-ம். அவனே + அழகன் = அவனேயழகன்.
சே + உழுதது = சேவுழுதது

---

## குற்றியலுகரவீற்றின் முன் உயிரும் யகரமும் புணர்தல்.

௩௧. குற்றியலுகரம் உயிர்வந்தாற் றானேறி நின்ற மெய்யைவிட்டுக் கெடும்; யகரம் வந்தால் இகரமாகத் திரியும்.

உ-ம். ஆடு + அரிது = ஆடரிது.
நாகு + யாது = நாகியாது.

குற்றியலுகரஞ் சம்ஸ்கிருதபாஷையில் இல்லாமையால், சம்பு, இந்து முதலிய வடமொழிகளின் ஈற்றுகரம் உயிர் வரினுங் கெடாது நிற்க, உடம்படுமெய் தோன்றும்.

உ-ம். சம்பு + அருளினான் = சம்புவருளினான்
இந்து + உதித்தது = இந்துவுதித்தது

---

## சில முற்றியலுகரவீற்றின் முன் உயிரும் யகரமும் புணர்தல்.

௩௨. சில முற்றியலுகரமும், உயிர் வரின் மெய்

யை விட்டுக்கெடுதலும், யகரம் வரின் இகரமாகத் திரிதலுமாகிய இவ்விருவிதியையும், பெறும்.

உ-ம். கதவு + அழகு = கதவழகு
கதவு + யாது = கதவியாது.

---

## எல்லாவீற்றின் முன்னும் மெல்லினமும் இடையினமும் புணர்தல்.

௬௩. உயிரும் மெய்யுமாகிய எல்லாவீற்றின் முன்னும் வரும் ஞ ந ம ய வக்கள், இருவழியினும், இயல்பாம்; ஆயினும், இவற்றுள், ண ள ன ல என்னும் நான்கின் முன்னும் வருநகரந் திரியும். இத்திரிபு மேற் கூறப்படும்.

விள, பலா, புளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ, உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், யாழ், வாள் என்னும் நிலைமொழிகளோடு, அல்வழிப்புணர்ச்சிக்கு உதாரணமாக, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது என்னும் வருமொழிகளையும், வேற்றுமைப்புணர்ச்சிக்கு உதாரணமாக, ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை என்னும் வருமொழிகளையுங் கூட்டிக் கண்டுகொள்க.

உ-ம். விள + ஞான்றது = விளஞான்றது
உரிஞ் + ஞான்றது = உரிஞுஞான்றது

விள + ஞாற்சி = விளஞாற்சி
உரிஞ் + ஞாற்சி = உரிஞுஞாற்சி

நிலைமொழியீற்றுச் சில விகாரப்படுதல், பின்பு அவ்வவற்றிற்கூறும் விதியாற் பெறப்படும்.

௬௪. தனிக்குற்றெழுத்தைச் சார்ந்த யகரமெய்யின் முன்னுந் தனி ஐகாரத்தின் முன்னும் வரும் மெல்லினம் மிகும்.

உ-ம். மெய் + ஞானம் = மெய்ஞ்ஞானம்.
செய் + நன்றி = செய்ந்நன்றி
கை + மாறு = கைம்மாறு.

௬௫. நொ, து என்னும் இவ்விரண்டின் முன் வரும் ஞ ந ம ய வக்கள் மிகும்.

உ-ம். நொ + ஞெள்ளா = நொஞ்ஞெள்ளா
யவனே = நொய்யவனே
து + ஞெள்ளா = துஞ்ஞெள்ளா
யவனே = துய்யவனே
நொ - துன்பப்படு. து - உண்.

---

மெய்யீற்றின் முன் யகரம் புணர்தல்.

௬௬. யகரமல்லாத மெய்கள், தம்முன் யகரம் வந்தால், இகரச்சாரியை பெறுதலுமுண்டு.

உ-ம். வேள் + யாவன் = வேளியாவன்
மண் + யானை = மண்ணியானை.

வேள்யாவன் என இகரச்சாரியை பெறாது வருதலே பெரும்பான்மையாம்.

௬௭. தனிக்குற்றெழுத்தைச் சாராத யகரமெய் வருமொழி யகரம் வந்தாற் கெடும்.

உ-ம். வேய் + யாது = வேயாது.

---

## மூன்று சுட்டின் முன்னும் எகரவினா முன்னும் நாற்கணமும் புணர்தல்.

௬௮. அ, இ, உ என்னு மூன்று சுட்டின் முன்னும், எகரவினா முன்னும், யகரமொழிந்த மெய்கள் வந்தால், வந்த வெழுத்து மிகும்; யகரமும் உயிரும் வந்தால், இடையில் வகரந் தோன்றும்.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். அக்குதிரை | இக்குதிரை | உக்குதிரை | எக்குதிரை |
| அம்மலை | இம்மலை | உம்மலை | எம்மலை |
| அவ்வழி | இவ்வழி | உவ்வழி | எவ்வழி |
| அவ்யானை | இவ்யானை | உவ்யானை | எவ்யானை |
| அவ்வுயிர் | இவ்வுயிர் | உவ்வுயிர் | எவ்வுயிர். |

௬௯. அந்த, இந்த, உந்த, எந்த என மரூஉமொழிகளாய் வருஞ் சுட்டு வினாக்களின் முன் வரும் வல்லினம் மிகும்.

உ-ம். அந்தக்கல் இந்தக்கல் உந்தக்கல் எந்தக்கல்.

---

## உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்களின்முன் வல்லினம் புணர்தல்.

௧00. உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்களினீற்று உயிர் முன்னும், யகர ரகரமெய்களின் முன்னும் வரும் வல்லினம் இருவழியினும் மிகாதியல்பாம். உ-ம்.

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| நம்பிகுறியன் | நம்பிகை | உயர்திணைப் பெயர். |
| விடலைசிறியன் | விடலைசெவி | |
| சேய்பெரியன் | சேய்படை | |
| அவர் தீயர் | அவர்தலை | |
| சாத்திகுறியள் சாத்திகுறிது | சாத்திகால் | பொதுப் பெயர். |
| தந்தைசிறியன் தந்தைசிறிது | தந்தைசெவி | |
| தாய்கொடியள் தாய்கொடிது | தாய்கை | |

ரகரமெய் பொதுப்பெயர்க்கு ஈருகாது.

நம்பிக்கொற்றன், சாத்திப்பெண், சேய்க்கடவுள், தாய்ப்பசு என இருபெயரொட்டுப் பண்புத்தொகையினும், தாய்க்கொலை, ஒன்னலர்ச்செகுத்தான் என இரண்டாம்வேற்றுமைத்தொகையினும், செட்டித்தெரு என ஒரோவிடத்து ஆறும் வேற்றுமைத்தொகையினும், வல்லின மிகுமெனக் கொள்க.

மகப்பிறந்தது, மகப்பெற்றாள். எ-ம். பிதாக்கொடியன், பிதாக்கை. எ-ம். ஆடூச்சிறியன், ஆடூச்செவி. எ-ம். கோத்திய

ன், கோத்தலை. எ-ம். அகர ஆகார ஊகார ஓகாரங்களின் முன்வரும் வல்லினம் இருவழியினும் மிகுமெனக் கொள்க.

௧௦௧. உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்களினீற்று லகர ளகர ணகர னகரமெய்கள், வல்லினம் வந்தால், இருவழியினுந் திரியாதியல்பாம். உ-ம்.

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| தோன்றல்குறியன் | தோன்றல்கை | உயர்திணைப் பெயர். |
| அவள் சிறியள் | அவள் செவி | |
| அவன் பெரியன் | அவன்பொருள் | |

ணகரமெய் உயர்திணைப்பெயர்க்கு ஈறாகாது.

| | | |
|---|---|---|
| தூங்கல் குறியன்<br>தூங்கல் குறிது | தூங்கல்கை | பொதுப் பெயர். |
| மக்கள் சிறியர்<br>மக்கள் சிறிய | மக்கள்செவி | |
| ஆண் பெரியன்<br>ஆண் பெரிது | ஆண்புறம் | |
| சாத்தன் சிறியன்<br>சாத்தன் சிறிது | சாத்தன்செவி | |

உயர்திணைப்பெயரீற்று லகர ளகரங்கள், மாற்கடவுள், மக்கட்சுட்டு என இருபெயரொட்டுப்பண்புத்தொகையினும், லகர ளகர னகரங்கள், குரிசிற் கண்டேன், மகட்கொடுத்தான், தலைவற்புகழ்ந்தான் என இரண்டாம் வேற்றுமைத்தொகையினுந் திரியுமெனக் கொள்க.

லகர ளகரங்களின் முன்னும், ணகர னகரங்களின் முன்

னும், தகரம் மயங்குதற்கு விதியில்லாமையால், வரும் விகார
ம் மேற்கூறப்படும்.

---

## சிலவுயர்திணைப் பெயர் முன் நாற்கணமும் புணர்தல்.

கo௨. ணகர ரகரவீற்றுச் சிலவுயர்திணைப் பெயர் முன் நாற்கணமும் புணருமிடத்து, உம்மைத்தொகையினும், இருபெயரொட்டுப்பண்புத்தொகையினும், ஆறும்வேற்றுமைத்தொகையினும், நிலைமொழியேனும், வருமொழியேனும், இவ்விருமொழியுமேனும் விகாரப்படும். உ-ம்.

உம்மைத்தொகை.

கபிலன் + பரணன் = கபிலபரணர்

இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

| | | | | |
|---|---|---|---|---|
| சிவன் | + | பெருமான் | = | சிவபெருமான் |
| முருகன் | + | கடவுள் | = | முருகக்கடவுள் |
| சதாசிவன் | + | நாவலன் | = | சதாசிவநாவல்ன் |
| கந்தன் | + | வேள் | = | கந்தவேள் |
| வேலாயுதன் | + | உபாத்தியாயன் | - | வேலாயுதவுபாத்தியாயன் |
| தியாகராசர் | + | செட்டியார் | = | தியாகராசச்செட்டியார் |
| விநாயகர் | + | முதலியார் | = | விநாயகமுதலியார் |

வேற்றுமைத்தொகை.

| | | | | |
|---|---|---|---|---|
| குமரன் | + | கோட்டம் | = | குமரகோட்டம் |
| | | | | குமரக்கோட்டம் |

வாணிகர் + தெரு = வாணிகத்தெரு
வேளாளர் + வீதி = வேளாளவீதி

---

## விளிப்பெயர் முன் வல்லினம் புணர்தல்.

க0ரு. விளிப்பெயரீற்று உயிர்முன்னும் ய ர ழ வொற்றுக்களின் முன்னும் வரும் வல்லினம் மிகாதியல்பாம். அப்பெயரீற்று லகர ளகர ணகர னகரங்கள் வல்லினம் வந்தாற் றிரியாதியல்பாம்.

உ-ம். புலவபாடு — சாத்தா கேள்
நம்பிசெல் — தம்பீ தா
வேந்துகூறு — மகனே படி
விடலைபோ — நங்காய் பார்
நாய்கீர்சென்மின் — குறும்பூழ் போ
தோன்றல்கூறாய் — மக்காள் சொல்லீர்
ஆண் கேளாய் — கோன் பேசாய்

விளக்கொடியை, பிதாக் கூறாய், ஆடேச் சொல்லாய், சேச் செல்லாய், கோப் பேசாய் என அகரஆகார ஊகார ஏகார ஓகாரங்களை இயல்பீறாகவுடைய விளிப்பெயர் முன் வரும் வல்லினம் மிகுமெனக் கொள்க.

---

## ஈற்று வினைமுன்னும் யாவினாமுன்னும் வல்லினம் புணர்தல்.

க0ச. ஆ, ஏ, ஓ என்னும் மூன்றீற்று வினைமுன்னும் யாவினாமுன்னும் வரும் வல்லினம் மிகாவாம்.

உ-ம். அவனு கொண்டான் அவனேசென்றான்
அவனோ தந்தான் யாபெரிய

---

## வினைமுற்று வினைத்தொகைகளின் முன் வல்லினம் புணர்தல்.

கoரு. வினைமுற்று வினைத்தொகைகளினீற்று உயிர் முன்னும், ய ர ழ வொற்றுக்களின் முன்னும் வரும் வல்லினம் மிகாதியல்பாம். அச்சொற்களி னீற்று லகர ளகர ணகர னகரங்கள் வல்லினம் வந்தாற் றிரியாதியல்பாம். உ-ம்.

தெரிநிலை வினைமுற்று.

| | |
|---|---|
| உண்டன குதிரைகள் | உண்ணுகுதிரைகள் |
| வருதி சாத்தா | வந்தனை சாத்தா |
| வந்தது புலி | வந்தாய் பூதா |
| உண்டீர் தேவரே | உண்டார் தேவர் |
| உண்பல் சிறியேன் | உண்டாள் சாத்தி |
| வந்தேன் சிறியேன் | வந்தான் சாத்தன் |

குறிப்புவினை முற்று.

| | |
|---|---|
| கரியன குதிரைகள் | வில்லிசாத்தா |
| கரியது தகர் | கரியை தேவா |
| கரியாய் சாத்தா | கரியீர் சாத்தரே |

கூயிற்றுக் குயில், குறுந்தாட்டுக் களிறு என வன்றொடர்க் = குற்றியலுகரவீற்றுத் தெரிநிலைவினைமுற்றின் முன்னும்,

குறிப்புவினைமுற்றின் முன்னுமாத்திரம் வரும் வல்லினம் மிகுமெனக் கொள்க.

### ஏவலொருமை வினைமுற்று.

நட கொற்றா
எறி தேவா
ஓடு கொற்றா
பரசு தேவா
அஞ்சு கொற்றா
வனை தேவா
சேர் சாத்தா
நில் கொற்றா
உண் கொற்றா
வா சாத்தா
கொடு பூதா
வெஃகு சாத்தா
நடத்து பூதா
எய்து சாத்தா
செய்கொற்றா
வாழ் பூதா
கேள் சாத்தா
தின் சாத்தா

நொ, து என்னும் ஏவலொருமை வினைமுற்றிரண்டின் முன்னும் வரும் வல்லினம் மிகும்.

உ-ம். நொக்கொற்றா துச்சாத்தா.

### வினைத் தொகை.

விரிகதிர்
அடுகளிறு
ஆடுபாம்பு
பெருகுபுனல்
விஞ்சுபுகழ்
உண்கலம்
கொல்களிறு
செய்கடன்
வீழ்புனல்
ஈபொருள்
வனைகலம்
அஃகுபிணி
ஈட்டுதனம்
மல்கு சுடர்
தின்பண்டம்
கொள்கலம்
தேர்பொருள்

ஏவலொருமைவினைமுற்றும், வினைத்தொகையும் வன்றொடர்க்குற்றியலுகரவீற்றனவாயினும், அவற்றின் முன் வரும் வல்லினம் மிகாமை காண்க.

ணகர ழகரவீறுகள் வினைத்தொகைக்கும் ஏவன்முற்றுக்குமன்றி, மற்றை வினைமுற்றுக்களுக்கு இல்லை. லகர வீறு குறிப்புவினைமுற்றுக்கு இல்லை.

---

## பெயரெச்சத்தின்முன் வல்லினம் புணர்தல்.

௧0௬. அகரவீற்றுப்பெயரெச்சத்தின் முன் வரும் வல்லினம் மிகா. ஈற்றுயிர்மெய்கெட்டு ஆகாரவிறுதியாக நின்ற எதிர்மறைப் பெயரெச்சத்தின் முன் வரும் வல்லினம் மிகும்.

| | | |
|---|---|---|
| உ-ம். | உண்ட கொற்றன் | கரிய கொற்றன். |
| | உண்ணாத குதிரை | இல்லாத குதிரை. |
| | உண்ணாக் குதிரை | இல்லாக் குதிரை. |

---

## வினையெச்சத்தின் முன் வல்லினம் புணர்தல்.

௧0௭. இ, ய், ஆ, ஊ, என, அ என்னும் விகுதிகளையுடைய தெரிநிலைவினை வினையெச்சங்களின் முன்னும், அ, றி என்னும் விகுதிகளையுடைய குறிப்புவினை வினையெச்சங்களின் முன்னும், வழி, கடை என்னும் விகுதி

களையுடைய இவ்விருவகை வினையெச்சங்களின் முன்னும் வரும் வல்லினம் மிகும்.

உ-ம். தேடிக்கொண்டான் போய்க்கொண்டான்
உண்ணூச்சென்முன் உண்ணூச்சென்முன்
உண்டெனப்பசிதீர்ந்தது உண்ணப்போனன்
மெல்லப்பேசினன் நாளின்றிப்போனன்
உண்டவழித்தருவான் உண்டக்கடைத்தருவான்
அவனில்லாவழிச்செய்வான் அவனில்லாக்கடைச்செய்வான்

கOஅ. இய, இயர், மே, மை என்னும் விகுதிகளையுடைய வினையெச்சங்களின் முன் வரும் வல்லினம் மிகா.

உ-ம். உண்ணியசென்முன் உண்ணியர்சென்முன்
உண்ணூமேபோனன் உண்ணூமைபோனன்

கOகூ. வன்றொடர்க்குற்றியலுகரவீற்று வினையெச்சத்தின் முன் வரும் வல்லின மிகும்; மற்றைக் குற்றியலுகரவீற்று வினையெச்சங்களின் முன் வரும் வல்லினம் மிகா.

உ-ம். அடித்துக்கொன்முன் உண்பாக்குச்சென்முன்
பொருதுசென்முன் நடந்துபோனன்
எய்துகொன்முன் அவனல்லதுபேசுவார்யார்

துவ்விகுதி கெட நின்ற எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சத்தின் முன்வரும் வல்லினமிகும்.

உ-ம். உண்ணப்போனான்.

கக0. வினையெச்சத்திற்று ணகர லகரங்கள் றகரமாகத் திரியும்; வான் பான் இரண்டுந் திரியா.

உ-ம். வரிற்கொள்ளும் உண்டாற்கொடுப்பேன்
அறிவான்சென்றான் உண்பான்போனான்

---

## இ உ ஐயொழிந்த உயிரீற்றஃறிணைப் பெயர்முன் வல்லினம் புணர்தல்.

கக௧. அ, ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்னும் ஆறுயிரீற்றஃறிணைப் பெயர்முன்னும் வரும் வல்லினம் இருவழியினும் மிகும். உ-ம்.

| அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| விளக்குறிது | விளக்கோடு |
| தாராச்சிறிது | தாராச்சிறை |
| தீச்சுடும் | தீச்சுவாலை |
| கொண்மூக்கரிது | கொண்மூக்கருமை |
| சேப்பெரிது | சேப்பெருமை |
| கோச்சிறிது | கோச்செவி |

ககஉ. அகரவீற் றஃறிணைப் பன்மைப்பெயர் முன்னும், வகரவைகாரவீற்றஃறிணைப் பன்மைப்பெயர் முன்னும் வரும் வல்லினம் இருவழியினும் மிகா. உ-ம்.

| அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| பல போயின | பல படைத்தான் |
| சில சென்றன | சிலசொற்றான் |

உள்ளன குறைந்தன — உள்ளனகொடுத்தான்
உள்ளவை தகர்ந்தன — உள்ளவை தந்தான்

பல, சில என்னும் இரு பெயருந் தம்முன்னே தாம் வரின், வருமொழிமுதலெழுத்து இயல்பாகியும், மிக்கும், நிலைமொழி யீற்றின் அகரங் கெட லகரம் றகரமாகத் திரிந்துந் திரியாதும் வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ-ம். | பலபல | பலப்பல | பற்பல | பல்பல |
| | சிலசில | சிலச்சில | சிற்சில | சில்சில |

பல, சில என்னும் இருபெயர் முன்னும் பண்புத்தொகையிற் பிறபெயர் வரின், நிலைமொழியீற்றின் அகரங்கெடாதுங் கெட்டும் வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ-ம். | பலகலை | பல்கலை | சிலகலை | சில்கலை |
| | பலமலை | பன்மலை | சிலமலை | சின்மலை |
| | பலயானை | பல்யானை | சிலயானை | சில்யானை |
| | பலவணி | பல்லணி | சிலவணி | சில்லணி |

கககூ. ஆ, மா, ஆமா, பீ, நீ, என்னும் பெயர்களின் முன் வரும் வல்லினம் அல்வழியின் இயல்பாம்.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | ஆதின்டிற்று | மாசிறிது | ஆமா பெரிது |
| | பீகிடந்தது | நீ பெரியை | |

மா - இங்கே விலங்கு. ஆமா - காட்டுப்பசு.

கககச. பூ என்னும் பெயர் முன் வரும் வல்லெழுத்து மிகுதலே யன்றி இனமெல்லெழுத்தும் மிகும்.

உ-ம். பூக்கொடி பூங்கரும்பு.

பூ என்பது மலருக்கும் பொலிவுக்கும் பெயர். மலர்ப் பொருளில் வேற்றுமை; பொலிவுப்பொருளில் அல்வழி.

---

## முற்றியலுகர வீற்றுப் பெயர் முன் வல்லினம் புணர்தல்.

௧௧௫. முற்றியலுகரவீற்றுப் பெயர் முன் வரும் வல்லினம் இருவழியினும் மிகும். உ - ம்.

| அல்வழி. | வேற்றுமை. |
| --- | --- |
| பசுக் குறிது | பசுக்கோடு |

௧௧௬. முற்றுகரவீற்று அது, இது, உது என்னுஞ் சுட்டுப்பெயர் முன்னும், எது என்னும் வினுப்பெயர் முன்னும், ஒரு, இரு, அறு, எழு என்னும் விகாரவெண்ணுப்பெயர் முன்னும் வரும் வல்லினம் மிகாவாம். உ - ம்.

| அல்வழி. | வேற்றுமை. |
| --- | --- |
| அதுகுறிது | அது கண்டான் |
| இது சிறிது | இது சொற்றான் |
| உது தீது | உது தந்தான் |
| எது பெரிது | எது பெற்றான் |

அல்வழி.

ஒருகை, இருசெவி, அறுகுணம், எழுகடல்.

---

## இ ஐ ய ர ழ வீற் றஃறிணைப் பெயர்முன் வல்லினம் புணர்தல்.

கக௭. இகர ஐகாரவுயிர்களையும், ய ர ழ வொற்றுக்களையும் இறுதியாகவுடைய அஃறிணைப்பெயர்களின் முன் வரும் வல்லினம், வேற்றுமையினும், அல்வழியிலே பண்புத்தொகையினும், உவமைத்தொகையினும், மிகும். எழுவாய்த்தொடரினும், உம்மைத்தொகையினும் மிகாவாம். உ-ம்.

| | | | |
|---|---|---|---|
| கரிக்கோடு | யானைச்செவி | | வேற்றுமை |
| நாய்க்கால் | தேர்த்தலை | பூழ்ச்செவி | |
| மாசித்திங்கள் | சாரைப்பாம்பு | | பண்புத் தொகை. |
| மெய்க்கீர்த்தி | கார்ப்பருவம் | பூழ்ப்பறவை | |
| காவிக்கண் | குவளைக்கண் | | உவமைத் தொகை. |
| வேய்த்தோள் | கார்க்குழல் | காழ்ப்படிவம் | |
| பருத்திகுறிது | யானைகரிது | | எழுவாய். |
| நாய்தீது | வேர்சிறிது | யாழ்பெரிது | |
| பரணிகார்த்திகை | யானைகுதிரை | | உம்மைத் தொகை. |
| பேய் பூதம் | நீர்கனல் | இகழ்புகழ் | |

இரண்டாம்வேற்றுமைத்தொகையினும், ஏழாம்வேற்றுமைத்தொகையினும், வருமொழி வினையாயவிடத்து வல்லினம் மிகா. உ-ம்.

| இரண்டாம்வேற்றுமை. | ஏழாம்வேற்றுமை. |
|---|---|
| புலிதின்றான் | அடவிபுக்கான் |
| குவளைகொய்தான் | வரைபாய்ந்தான் |
| வேய்பிளந்தான் | வாய்புகுந்தது |

தேர்செய்தான் ஊர்சென்றான்
தமிழ்கற்றான் அகம்குறித்தான்

காவித்தடம், மனைத்தூண் என உருபும் பயனும் உடன்றொக்கதொகையாயின், வல்லினம் மிகுமெனக் கொள்க. புளிதின்றான், அடவிபுக்கான் என்பன, புளியைத் தின்றான், அடவியின்கட்புக்கான் என விரிதலின், உருபு மாத்திரந் தொக்கதொகை. காவித்தடம், மனைத்தூண் என்பன, காவியையுடைய தடம், மனையின்கண்ணதாகியதூண் என விரிதலின், உருபும் பயனும் உடன்றொக்கதொகை.

எரிகரை, குழவிகை, மலைகிழவோன் எனச் சிறுபான்மை அஃறிணைப்பெயரிடத்து வேற்றுமையில் வல்லினம் மிகாமை காண்க.

ஒரோவிடத்து, வெய்ங்குழல், ஆர்ங்கோடு என வேற்றுமையில் யகர ரகரங்களின் முன்னும், பாழ்ங்கிணறு எனப் பண்புத்தொகையில் ழகரத்தின்முன்னும், இனமெல்லெழுத்து மிகுமெனக்கொள்க.

பெய்கோட்பட்டான், பெய்க்கோட்பட்டான். எ-ம். சூர்கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான். எ-ம். ஒரோவழிச் செயப்பாட்டுவினை முடிக்குஞ்சொல்லாக வருமிடத்து, யகர ரகரங்களின் முன் வரும் வல்லினம் ஒருகால் இயல்பாயும், ஒருகாற் றிரிந்தும் வரும்.

---

## சிலமரப்பெயர்முன் வல்லினம் புணர்தல்.

கக அ. உயிரீற்றுச் சில மரப்பெயர் முன் வல்லினம் வரின், இனமெல்லெழுத்து மிகும்.

உ-ம். மா + காய் = மாங்காய்
விள + காய் = விளங்காய்

கககூ. இகர உகர லகரவிற்றுச் சில மரப்பெயர் முன் வல்லினம் வரின், அம்முச்சாரியை தோன்றும்.

உ-ம். புளி + காய் = புளியங்காய்
புன்கு + காய் = புன்கங்காய்
ஆல் + காய் = ஆலங்காய்

கஉ0. ஐகாரவீற்றுச் சில மரப்பெயர் முன் வல்லினம் வரின், நிலைமொழியீற்றைகாரங் கெட்டு அம்முச்சாரியை தோன்றும்.

உ-ம். எலுமிச்சை + காய் = எலுமிச்சங்காய்
மாதுளை + காய் = மாதுளங்காய்.

---

## சில வேற்றுமை யுருபின் முன் வல்லினம் புணர்தல்.

கஉக. ஒடு, ஓடு என்னும் மூன்றும்வேற்றுமை யுருபுகளின் முன்னும், அது, ஆது, அ என்னும் ஆறும் வேற்றுமையுருபுகளின் முன்னும் வரும் வல்லினம் மிகா. உ-ம்.

மகனொடுபோனான் மகனோடுபோனான்
தனதுகை தனாதுகை தனகைகள்.

---

## குற்றியலுகர வீறு.

௧௨௨. வன்றொடர்க்குற்றியலுகரவீற்று மொழிகளின் முன் வரும் வல்லினம் இருவழியினும் மிகும். உ-ம்.

| அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| கொக்குக்கடிது | கொக்குச்சிறை |
| சுக்குத்திப்பிலி | சுக்குக்கொடு |

௧௨௩. மென்றொடர்க்குற்றியலுகரவீற்று மொழிகளின் முன் வரும் வல்லினம் அல்வழியில் இயல்பாம்; வேற்றுமையிலே மிகும். உ-ம்.

| அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| குரங்கு கடிது | குரங்குக்கால் |
| அம்பு தீது | அம்புத்தலை. |

குரங்கு பிடித்தான் என இரண்டாம்வேற்றுமைத்தொகையிலும், அரங்குபுக்கான் என ஏழாம்வேற்றுமைத்தொகையிலும், வருமொழி வினையாயவிடத்து, வல்லினம் மிகாவெனக் கொள்க.

௧௨௪. ஏழாம்வேற்றுமையிடப்பொருளுணரநின்ற அன்று, இன்று, என்று, பண்டு, முந்து என்னும் இடைச்சொற்களின் முன் வரும் வல்லினம் மிகா. உ-ம்.

அன்றுகண்டான்
இன்றுதந்தான்
என்றுசென்றான்.
பண்டு பெற்றான்
முந்துகொண்டான்

ஏழாம்வேற்றுமை யிடப்பொருளுணர நின்ற அங்கு, ஆங்கு, இங்கு, ஈங்கு, உங்கு, ஊங்கு, எங்கு, யாங்கு, யாண்டு என்னும் இடைச்சொற்களின் முன்வரும் வல்லினம் மிகும். உ-ம்.

அங்குக்கண்டான்
ஆங்குக்கண்டான்
இங்குச்சென்றான்
ஈங்குச்சென்றான்
உங்குத்தந்தான்
ஊங்குத்தந்தான்
எங்குப்பெற்றான்
யாங்குப்பெற்றான்
யாண்டுப்பெற்றான்.

௧௨௫. நெடிற்றொடர், ஆய்தத்தொடர், உயிர்த்தொடர், இடைத்தொடர் என்னும் இந்நான்கு தொடர்க்குற்றியலுகரவீற்றுமொழிகளின் முன் வரும் வல்லினம் இருவழியினும் இயல்பாம். உ-ம்.

அல்வழி.

நாகு கடிது
எஃகு கொடிது
வரகு சிறிது
தெள்கு பெரிது

வேற்றுமை.

நாகு கால்
எஃகு கூர்மை
வரகு சோறு
தெள்குபெருமை

௧௨௬. டுவ்வையும் றுவ்வையும் இறுதியிலுடைய நெடிற்றொடர் உயிர்த்தொடர்க் குற்றியலுகரவீற்றுமொழிகளின் முன் நாற்கணமும் வரின், உகரமேறிய

டகர றகரமெய்கள் வேற்றுமையிற் பெரும்பாலும் இரட்டும். உ-ம்.

| | | |
|---|---|---|
| ஆட்டுக்கால் | ஆற்றுக்கால் | நெடிற்றொடர். |
| ஆட்டுமயிர் | ஆற்றுமணல் | |
| ஆட்டுவால் | ஆற்றுவழி | |
| ஆட்டதர் | ஆற்றூறல். | |
| பகட்டுக்கால் | வயிற்றுக்குடல் | உயிர்த்தொடர். |
| பகட்டுமார்பு | வயிற்றுமயிர் | |
| பகட்டுவால் | வயிற்றுவலி | |
| பகட்டடி | வயிற்றணி | |

காட்டரண், எற்றுப்பன்றி, வரட்டாடு, வெளிற்றுப்பனை எனச் சிறுபான்மை அல்வழியிலே பண்புத்தொகையில் இரட்டுதலும், வெருக்குக்கண், எருத்துமாடு எனச் சிறுபான்மை இருவழியிலும் பிறவெற்றிரட்டுதலும் உளவெனக் கொள்க.

ஆடுகொண்டான், ஆறுகண்டான், பகடுதந்தான், பயறுதின்றான் என இரண்டாம்வேற்றுமைத்தொகையினும், காடுபோந்தான், ஆறுபாய்ந்தான், அகடுபுக்கது, வயிறுபுக்கது என ஏழாம்வேற்றுமைத்தொகையினும், வருமொழி வினையாயவிடத்து, வல்லினம் இரட்டாவெனக் கொள்க.

கஉஎ. மென்றொடர்க்குற்றியலுகரவீற்று மொழிகளுள்ளே சில, நாற்கணமும் வரின், வேற்றுமையிலும், அல்வழியிலே பண்புத்தொகையிலும், உவமைத்

தொகையிலும், வன்றொடர்க்குற்றியலுகரமாதலுமுண்டு. உ-ம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மருந்து | + | பை | = | மருந்துப்பை | வேற்றுமை. |
| சுரும்பு | + | நாண் | = | சுருப்புநாண் | |
| கரும்பு | + | வில் | = | கருப்புவில் | |
| கன்று | + | ஆ | = | கற்றா | |
| அன்பு | + | தளை | = | அற்புத்தளை | பண்புத்தொகை. |
| என்பு | + | உடம்பு | = | எற்புடம்பு | |
| குரங்கு | + | மனம் | = | குரக்குமனம் | உவமைத்தொகை. |
| இரும்பு | + | நெஞ்சம் | = | இருப்புநெஞ்சம் | |

கஉஅ. சில மென்றொடர்க் குற்றியலுகரவீற்று மொழிகள், இறுதியில் ஐகாரச்சாரியை பெற்று வரும்.

உ-ம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பண்டு | + | காலம் | = | பண்டைக்காலம் | அல்வழி. |
| இன்று | + | நாள் | = | இற்றைநாள் | |
| அன்று | + | கூலி | = | அற்றைக்கூலி | வேற்றுமை. |
| இன்று | + | நலம் | = | இற்றைநலம் | |

சில மென்றொடர் மொழிகள், வருமொழி நோக்காது, ஒற்றை, இரட்டை எனத் தனிமொழியாக நின்றும், ஈராட்டை, மூவாட்டை எனத்தொடர்மொழியாக நின்றும், ஐகாரச்சாரியை பெறுதலுமுண்டு.

நேற்று + பொழுது = நேற்றைப்பொழுது. எ-ம். நேற்று + கூலி = நேற்றைக்கூலி. எ-ம். வன்றொடர் ஐகாரச்சாரியை பெறுதலுமுண்டு.

குற்றியலுகர வீற்றுத்திசைப்பெயர்களோடு திசைப் பெயர்களும் பிறபெயர்களும் புணர்தல்.

கஉகூ. வடக்கு குணக்கு, குடக்கு என்னுஞ்சொற்களின் ஈற்றுயிர்மெய்யுங் ககரவொற்றுங் கெடும். உ-ம்.

| | | | | |
|---|---|---|---|---|
| வடக்கு | + | கிழக்கு | = | வடகிழக்கு. |
| | | மேற்கு | = | வடமேற்கு. |
| | | திசை | = | வடதிசை. |
| | | மலை | = | வடமலை. |
| | | வேங்கடம் | = | வடவேங்கடம். |
| குணக்கு | + | திசை | = | குணதிசை. |
| | | கடல் | = | குணகடல். |
| குடக்கு | + | திசை | = | குடதிசை. |
| | | நாடு | = | குடநாடு. |

கிழக்கு என்பது, ஈற்றுயிர்மெய்யுங் ககரவொற்றும் ழகரமெய்யின்மேனின்ற அகரவுயிருங்கெட்டு, முதனீண்டு வரும்; அங்ஙனம் வருமிடத்து, வல்லெழுத்து, இயல்பாகியும், ஓரோவிடத்துமிகுந்தும், புணரும். உ-ம்.

கிழக்கு + பால் = கீழ்பால்.
திசை = கீழ்த்திசை

கீழைச்சேரி, கீழைவீதி என ஐகாரம் பெறுதலுமுண்டு.

தெற்கு என்பது, ஈற்றுயிர்மெய்கெட்டு, றகரம் னகரமாகத் திரிந்து, வரும். உ-ம்.

நெற்கு + கிழக்கு = தென்கிழக்கு.
மேற்கு = தென்மேற்கு.
மலை = தென்மலை.

மேற்கு என்பது, ஈற்றுயிர்மெய் கெட்டு, றகரம் லகரமாகத்திரிந்து, வரும். தகரம் வரிற் றிரியாது. உ-ம்.

மேற்கு + கடல் = மேல்கடல்.
வீதி = மேல்வீதி.
திசை = மேற்றிசை.

மேலைச்சேரி மேலைவீதி என ஐகாரம் பெறுதலு முண்டு.

இத்திசைப்பெயர்கள், வடக்கூர், தெற்கூர், கிழக்கூர், மேற்கூர், வடக்குவாயில், தெற்குமலை, கிழக்குத்திசை, மேற்குமலை என, இங்ஙனங் காட்டிய விகாரமின்றியும், வரும்.

வடகிழக்கு என்பது வடக்குங் கிழக்குமாய தொருகோணம் என உம்மைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

வடதிசை என்பது வடக்காகிய திசை எனப் பண்புத்தொகை.

வடமலை என்பது வடக்கின்கண்மலை என ஏழாம்வேற்றுமைத் தொகை.

உகரவீற்றெண்ணுப் பெயர்களோடு எண்ணுப் பெயர்கண் முதலிய பெயர்கள் புணர்தல்.

கந௦. ஒன்றென்னும் எண்ணின் ஈற்றுயிர்மெய் கெட்டு, னகரவொற்று ரகாமாகத் திரியும். வந்தது மெய்யாயின், ரகரம் உகரம் பெறும்; உயிராயின், உகரம் பெறாது முதனீளும். உ-ம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஒன்று | + | கோடி | = | ஒருகோடி |
| | | கழஞ்சு | = | ஒருகழஞ்சு |
| | | நாழி | = | ஒருநாழி |
| | | வாழை | = | ஒருவாழை |
| | | ஆயிரம் | = | ஓராயிரம் |

இரண்டென்னும் எண்ணின் ஈற்றுயிர்மெய்யும், ணகர வொற்றும், ரகரத்தின்மேனின்ற அகரவுயிருங் கெடும். வந்ததுமெய்யாயின், ரகரம் உகரம் பெறும்; உயிராயின், உகரம் பெறாது முதனீளும். உ-ம்.

| | | | | |
|---|---|---|---|---|
| இரண்டு | + | கோடி | = | இருகோடி |
| | | கழஞ்சு | = | இருகழஞ்சு |
| | | நாழி | = | இருநாழி |
| | | யானை | = | இருயானை |
| | | ஆயிரம் | = | ஈராயிரம் |

மூன்றென்னும் எண்ணின் ஈற்றுயிர்மெய் கெடும். நின்ற னகரமெய் வந்தது உயிராயிற்றானும் உடன் கெடும்; மெய்யாயின், முதல் குறுகி, னகரமெய் வருமெய்யாகத் திரியும். உ-ம்.

